ஓம்
தத்ஸத்
பரப்பிரஹ்மணே நம:.

# திருவள்ளுவர்
# தோத்திர விளக்கம்.



ஸ்ரீமத்,
தே. அ. சாமி குப்புசாமி அவர்களால்
இயற்றப்பட்டது.

இதன் விலை] 1929. [அணா 1.



திருவள்ளுவ நாயனார்.

ஓம்
தத்சத்
பரப்பிரஹ்மணே நம:



# திருவள்ளுவர்
# தோத்திர விளக்கம்.

இது
திருத்துருத்தி - இந்திரபீடம்
ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளாதீனம்
ஸ்ரீ ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகள் திருவடித்தொண்டர்
39-ஆவது பட்டாளம் சுபேதார் மேஜராயிருந்த
ஆத்மஞானி
ஸ்ரீ ஐயாக்கண்ணு தேசிகமூர்த்திகளின்
யாணவருளொருவராகிய
தே. அ. சாமி குப்புசாமி அவர்களால்
இயற்றப்பட்டு,

சென்னை - கோமளீசுரன்பேட்டை
ஆசிரியர்
ஸ்ரீமத், கோ வடிவேலு செட்டியாரவர்களால்
பார்வையிடப்பட்டு,

இந்நூலாசிரியரின் திருவடித்தொண்டர்
காளத்தி. இ. சிதம்பரசாமி புராணிகரால்
சென்னை
அமெரிக்கன் டைமெண்ட் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

இதன் விலை]　　1929.　　[அணா 1.

  

ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நம:.

# சாத்துகவிகள்.



திருக்கைலாய பரம்பரை - திருவண்ணுமலை பெரியமடம்
திருத்துறையூராதீனம் - விருத்தாசலம் - ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் மரபு
திருப்போரூர் - ஸ்ரீ மௌன சுவாமிகளின் திருவடித்தொண்டர்
ஸ்ரீமத், தணிகாசல சிவமவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்துபொய் யாமொழியீ
தெய்வப் புலவரெனத் தேரறிஞ—ஐயமிலா
சாமிவிளக் கம்முதலா நூல்பலசெய் சாமிகுப்பு
சாமியெனுஞ் சாந்தத் தவன்.

"கற்றதனு லாய பயனென்கொல்" என்ற
வுற்ற குறளி னுரையுணர்ந்து—சொற்ற
திருவள் ளுவர்தோத் திரவிளக்க மோதின்
கருவகலுங் காணுங் கதி.

பன்னூ லுரையனைத்தும் பார்த்துள் ளனுபவத்தால்
நன்னூல் பலவருளு நல்லறிஞ—னின்னூலில்
சாற்றுபொரு ளோர்ந்தோர் சனகசுக ராவதன்றி
யாற்றுகைம்மா றுண்டோ வறை.

---

சென்னை - கோமளேசுரன்பேட்டை,

ஆசிரியர்,

## ஸ்ரீமத், கோ. வடிவேலு செட்டியா ரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வையமெலாம் புகழுகின்ற வள்ளுவனார் பொன்னடியை மனத் துட் கொண்டோன், ஐயமற வேதாந்தந் தெளிபுலவன் பன்னூலு மாய்ந்த சீலன், மையறுமார்க் கங்கண்ட வள்ளுவர்தோத் திரவிளக் கம் வனப்புப் பத்தும், நையலறு சாமிகுப்பு சாமியென்பா னனை நவின்று நலமுற் றுனல்.

---

இந்நூலாசிரியரின் - திருவடித்தொண்டர்

பிரசங்க சிந்தாமணி - திருவான்மியூர்

## ஸ்ரீமத். த. கோவிந்தசாமி பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தேசமுய்ய வந்ததிரு வள்ளுவர்தந் திருக்குறளைத் தேர்ந்த மேலோன்
மாசகன்ற சாமிகுப்பு சாமிகுரு சாமியெனை வலிய வாண்டோன்
நேசமொடு செய்ததிரு வள்ளுவர்தோத் திரவிளக்க நெஞ்ச நிற்கத்
தேசுறவே படனஞ்செய் திடுவோர்க டிருவனைத்துஞ் சிறக்கவாழ்வார்.

---

இந்நூலாசிரியரின் திருவடித்தொண்டர்

## காளத்தி - இ. சிதம்பரசாமி புராணிகரியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

துன்புருவாம் பிறவியினித் தொடாாத வண்ணமெனைத் தொ ழும்பு கொண்ட, இன்புருவாஞ் சாமிகுப்பு சாமிகுரு தோத்தரித்த வெழிலை தாங்க, என்புருவா மயிலைதிரு வள்ளுவர்தோத் திரவிளக்க மென்னு நூலை, அன்புருவாப் பாராய ணஞ்செய்வோர் திருவனைத்து மணைவர் மாதோ.

---

# சிறப்புப்பாயிரம்.

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

**சிவஸ்ரீ - கலியாணசுந்தரயதீந்திரசுவாமி**

அவர்கள் மாணவரும்,

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் அத்திபட்சரும்,

செம்பியம் கிராமமுன்சீப்புமாகிய

பண்டிதரத்தினம்

**குகஸ்ரீ - புழலை - திருநாவுக்கரசு முதலியாரவர்களியற்றிய**

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீருலவுங் கல்வியறி வொழுக்கமிகு வாய்மைதிகழ் திருவி னோடு
பேருலவு மினியநய மொழிபகரும் விசுவாசப் பெருமை வாய்ந்த
நாருலவுந் தானதரு மங்கணிறை யுபகார நாடிச் செய்யும்
தாருலவுங் குருபத்தி யாதியசற் குணங்களமர் சதுர னென்ன. (க)

மாமணக்குந் தமிழ்நாடெங் கணுமணக்குங் கவிநான்கு மதிமிக் கார்ந்த
நாமணக்கு மலங்கார நலமணக்கும் பெரும்புலவர் நாடிச் சொற்ற
பாமணக்கும் பலசந்தப் பாக்களினை னிரப்பியவப் பண்பை யோர்ந்து
பூமணக்கு மைந்தியலு மிகத்தேர்ந்த வல்லுநரும் போற்று நிற்கும். ()

போதசொரூ பானந்த வநுபவா னந்தமொடு புகழுஞ் சாமி
ஏதமில்சீர் கற்புநிறை விளக்கமென நூலைந்து மியற்றித் தந்த
நாதன்றே னும்பேட்டை யங்கப்ப னம்மணிசெய் நற்ற வத்தின்
ஆதரவால் வருபுதல்வன் சாமிகுப்புச் சாமிப்பே ரன்பு பூண்டோன்.

பொன்பூத்த புகலியர்கோன் புகழ்மலிசெஞ் சூட்டரவின் பொலிவுற் றென்றும், மின்பூத்த வறிதுயில்கூர் நெடுமால்கண் டினிதேங்க வியன்சேர் வாசக், கொன்பூத்த வங்கம்பூம் பாவையென விமைக்கு முனங் குயிற்றித் தந்த, தென்பூத்த திருமயிலை மாநகரில் வதிதருமெந் தேவ தேவன். (ச)

சங்கையிலாக் கற்றவர்முன் னெடுத்துரைக்க வல்லதொரு தமிழ்நற் றெய்வச், செங்கமலத் திருக்குறணூல் தந்தாண்ட சிவாநுபவச் செல்வ ரென்னும், நங்கடிரு வள்ளுவர்தம் மலரடிக்குப் பத்திமிக நாடிச் சொற்ற, மங்களமார் வெண்பாத்தோத் திரவிளக்கங் கண்டவுடன் மனமீக் கூர. (ரு)

கன்னல்சருக் கரையமுதம் பால்பழந்தேன் கண்டுசுவை கலந்தூட் டுந்தண், சொன்னயமும் பொருணயமு மிகவழகாய் வெகுநயமாய்த் தொனிக்கு மந்தப், பன்னயமு மெடுத்துரைக்க வனந்தனும்பின் னிடுவனெனிற் பரிந்து வக்கும், என்னளவிற் கெப்படியா மெனநினைக்க வருவதலா லியம்பற் பாற்றே. (சு)



ஓம்

தத் ஸத்

பரப்பிரஹ்மணே நம:

---

# திருவள்ளுவர்

# தோத்திர விளக்கம்.

## பாயிரம்.

### பொருள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

சத்தசத்தாய்ச் சாட்சியாய்ச் சார்ந்துமே சாராத
எத்திக்குந் தானன வேன்வடிவைச்—சித்தமறப்
போற்றிசைத்தே னிந்நூலைப் புண்ணியராம் வள்ளுவர்தாள்
சாற்றி மலராத் தணிந்து. (க)

### ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரிய சுவாமிகள் வணக்கம்.

சங்கரா சாரிசிவ சாமிதிருத் தாள்வணங்கி
இங்குரைப்பே னென்னு ளிருப்பவெலாம்-பங்கமறக்
கண்டாருங் காணருங் காயாம லேற்றருளப்
பண்டைமறைச் சம்மதிக்கப் பார்த்து. (உ)

### ஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகள் வணக்கம்.

தப்பொப் புயர்வில்லாச் சச்சிதா நந்தசிவ
ஒப்பு நினக்கெவரை யோதுவன—னிப்புவியி
லெப்புலவ ரும்போற்று மென்பரம வாரியனே
கப்புடல்யா னென்னுமற் கா. (ங)

செந்நாப் புலவனையான் செந்தமிழாற் றோத்தரிக்க
நின்னருளை யேழைக்கு நீயருளி—முன்னின்று
துய்ய மனமளித்துத் தூயவரு ளம்வியக்க
வையசச்சி தாநந்த வாள். (ச)

## ஸ்ரீ ஐயாக்கண்ணு சுவாமிகள் வணக்கம்.

சற்றுங் குறையாத தானான வாஸ்தியெலாஞ்
சற்றுங் குறையாது தானளித்த—சிற்சொருப
வையாக்கண் ணுரியனே யன்புருவே நின்னடியா
லுய்யும் வகையறிந்தே னோர்ந்து. (ரு)

## அவையடக்கம்.

கற்றூர் துதிக்குங் கடவுளாம் வள்ளுவரைப்
பற்றகன்ற பண்டிதன்போற் பாடவந்தேன்—கற்றூரின்
காற்றூசு மொவ்வேன் கனிவாய்த் துதிபுரிந்து
போற்றுவனோ சீராப் புகழ்ந்து. (சு)

நல்லார் களித்திகழ்ந்தா னன்மையுண்டு நாயேற்குக்
கல்லாவென் போல்வார் களித்திகழ்ந்தால்—சொல்லாகா
எல்லை வரைகடந்தோ னீறிறுதி யாதலினு
லில்லையிக ழிந்நூலுக் கிங்கு. (எ)

## நூற்பெயர்.

எத்திசையுங் கீழ்மேலு மேத்துதிரு வள்ளுவர்தாள்
முத்திதரு மென்றுன்னி முற்பட்டு—வித்தார்
திருவள் ளுவர்தோத் திரவிளக்கஞ் சொற்றேன்
கருவிள்ளு மென்றே கனிந்து. (அ)



## நூல்.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவ னெனப்பகர்ந்த பண்பே—இகபரத்தி
லில்லைநீ யல்லாம லென்சொல்கே னின்பெருமை
சொல்லவல்லா ருண்டோ தொடர்ந்து. (க)

புண்ணியர்கள் போற்றுகின்ற பொய்யா மொழிப்புலவ
புண்ணியமா மெய்யடியைப் போற்றற்கு—நண்ணின்று
சுத்த நிலையுஞ் சுகமுங் கொடுத்தருள்வாய்
பத்தியுரு வாகப் பரிந்து. (உ)

எம்மதமு மொப்ப வியற்றிவைத்தாய் நற்குறளை
எம்மதமுந் தம்மதமா வெம்மானே—வெம்புமனஞ்
சும்மா விருக்குநின்றன் றாய குறள்படித்தா
லிம்மாய மென்னே யியம்பு. (௩)

நான்மறையின் மெய்ப்பொருளை நானிலத்தில் வள்ளுவனாய்த்
தான்வந்து நற்குறளிற் றந்தவனே—வான்குறளை
மண்ணுலகம் போற்றி மகிழ்ந்தின்ப முற்றிருக்க
வுண்ணினையாக் காரணமே னோ. (௪)

முத்திக்கு வித்தே முழுமுதலே முத்தரெலா
மெத்திக்கும் போற்றுகின்ற வென்னறிவே—பத்தருக்குச்
சித்திதரும் வள்ளுவனே செம்பொருளே சீற்றமற
வுத்தியொன்று கூறு யுவந்து. (௫)

பணிந்தார்க்குப் பேறுதரு பாக்கியனே முத்தி
துணிந்தீவா யென்று தொழுதேன்—பணிந்தினிய
நாளெல்லாம் வீணாக்கி நாயிற் கடையானேன்
ஆளக் கடனினக்கே யாம். (௬)

ஆள்வதுண்மை நின்குறளை யாய்ந்தறிந்த வன்பரைநீ
ஆள்வதெங்க ளுபாத வன்பிலிமை—யாள்வையென
நாடி யுனையடைந்தே னுன்குபத்து நீக்கினினைக்
கூடியொன் றாகவருள் கூர். (௭)

நாறுடலை நானென்று நம்பிநின்ற நாயேற்கு
நாறுடலைப் போக்கவரு ணாதனே—பாறுடலி
னானென்னும் புத்தி நமனாகு மென்றுணர்ந்தேன்
தேனென்னு முன்மொழியாற் றேர்ந்து. (௮)

அகண்டசிவ வென்வடிவை யாய்ந்தறிய நாயேற்
ககண்டசிவ தேவா வருள்வாய்—அகண்டனெனத்
திக்கெட்டும் போற்றுந் திருவள் ளுவநாத
துக்கசுக நீங்குமா சூழ்ந்து. (௯)

தேவசுக ரூபவுனைச் செந்தமிழாற் றோத்தரித்தேன்
பாவநிலை போக்கியருள் பாவலனே—தேவனே
யெவ்வடிவும் யானா யிருந்திலங்க வெப்போது
மெவ்வமற வெற்கருள்வா யிங்கு. (௧0)

மாதானு பங்கியென மாமறையோர் போற்றுவதா
லேதேனு நின்னருளை யீந்தருள்வாய்—வேதாவே
போதவொளி தன்னிற் பொருந்தவைப்பாய் புண்ணியனே
யாதரத்தோ டங்கிருக்க வாழ்ந்து. (கக)

பொய்யிற் புலவனெனப் புண்ணியர்கள் போற்றிசைக்க
அய்யமிலா நற்குறளை யாய்ந்தளித்தாய்—வய்யகத்து
மய்யல்படி பொய்மனத்தேன் மாலகற்றத் தாமதமேன்
துய்ய பெருவெளியே சொல். (கஉ)

செப்புஞ் சிவாகமமுஞ் செம்மறையுங் கீதையுமே
ஒப்புயர்வில் லாத வொருபொருளைச்—செப்புவபோல்
இப்புவியி லென்கோனு மின்பமொழி செப்பியதால்
தப்புடையேன் சார்ந்தேனின் றாள். (கங)

இந்திரிய வைம்முடிப்பாம் பெக்காலுஞ் சீறுவதால்
பந்தப் படுகுழியிற் பாழ்ப்பட்டேன்—செந்நாவாய்
அந்தமிலா ஞானக்கோ லன்பாகத் தந்தாயேல்
சிந்தவடித் துய்ந்திடுவேன் சேய். (கச)

நல்லார் துதித்தேத்து நன்மணியே நாவலருள்
வல்லாருன் போலுண்டோ வள்ளுவனே—கல்லாத
என்னையுநின் னன்பரைப்போ லின்னலறுத் தாட்கொள்வாய்
அன்னைதந்தை யாக வமர்ந்து. (கரு)

முதற்பா வலனே முதுமறையே நின்றன்
பதத்தா மரைவண்டாய்ப் பற்றிப்—பிதற்றுதலற்
றுன்னருளாந் தேனை யுவந்துண்ண நீயருளாய்
கன்மசன்ம நீங்கக் கறுத்து. (கசு)

ஊனுடலை யானென்னு மூனமற வென்னுருவின்
வானுலவும் வள்ளுவனே வாய்மைதனை—யானறிய
மெய்யுடம்பு பொய்யாமுன் மேதினியோர் சீயென்று
நய்யவுரை யாமுன் னவில். (கஎ)

கண்சுழன்று பற்கழன்று காலுழன்று சோருமுனம்
விண்ணுருவ மாமுனது மெய்வடிவ—நண்ணரிய
ஈதென்று காட்ட விதுதருணம் வந்தருள்வாய்
மாதானு பங்கியே மாண்பு. (கஅ)

கல்லைச் சிறுநீராற் காழ்கனக மாச்செய்த
தொல்லை மலமில்லாச் சுத்தனே—கல்லாத
அற்பனெனை யாள லருமையோ நின்னடிக்கு
விற்பனவே தாவே விளம்பு. (கசு)

அல்லற் பிறப்பிறப்பா லாருத் துயருற்று
நல்லபர ஞானிநினை நாடிவந்தேன்—அல்லலிலாச்
சுத்தநிலை காட்டிச் சுகாரம்ப மெய்வடிவை
அத்தனே யெற்கருள்வா யார்ந்து. (உ0)

இல்லறத்து ஞானியென யாவருமே தாந்துதிக்க
நல்லகுண வாசுகிபா னன்கிருந்தாய்—நல்லோர்கள்
எவ்வறத்தி லுற்றாலு மேதமிலை யென்பதுண்மை
செவ்வையுறக் காட்டிவைத்தாய் தேர்ந்து. (உக)

பொய்யா மொழிக்குறளைப் புல்லனெனைப் போல்வாரும்
அய்யமுறு தாய்ந்துணர்ந் தல்லலற்றறிந்—துய்யவே
வய்யமதில் வாய்மலர்ந்த வானோர் புகழ்பொருளே
துய்யநினைப் போலார் துணை. (உஉ)

காலைமலர் தூவிக் கழல்பணியாப் பாவியேன்
ஞாலமதி னுன்மனித னுவிருந்தே—ஞலமனக்
கோலத்தி லுற்றுக் குடும்பமெய் யென்றுழன்று
சால நினைமறந்தேன் ருன். (உங)

வள்ளுவரே வள்ளலே வானோர்கள் போற்றமுதே
கள்ளனெனத் தள்ளாதுன் கால்பணிய—உள்ளிருந்து
துள்ளு மனம்போக்கிச் சுந்தரநின் றாவடிவைக்
கள்ளா தெனக்கருளிக் கா. (உச)

மரணசன னம்மகன்ற மாண்புலவர் போற்றுங்
கரணங்கட் கெட்டாத கண்ணே—யரணவிருள்
நீக்குங் கருணையொளி நீயென்ற நாணடைந்தேன்
காக்குந் தருணமிது காண். (உரு)

துக்கப் பெருநோயாற் சோர்வுற்று வாடுமுனும்
ஒக்கன் மனைமக்க ளோலிட்டு—வக்கணையாற்
பாடியழு முன்னும் பரவொளியாம் பாவலனே
நாடி நினையடைய நல்கு. (உசு)

மனத்திரையின் மொத்துண்டு மாளாப் பிறப்பில்
கனத்த துயராற் கலங்கி—வனத்தில்
பிணந்துய்க்கு நாயினிலும் பீழையுற்றே னின்ப
வுணவெற் கருளா யுவந்து. (௨௭)

உடம்பையா னென்னு முணர்வற்ற நாயைத்
திடம்படவே நின்னருளாற் றேற்றி—மடமகற்றிக்
கற்றாருங் காணாத கண்ணாகு மென்வடிவை
நற்புலவ தாராய் நயந்து. (௨௮)

கண்டார் நினைப்பதரு கற்பகசிந் தாமணியே
பண்டா மறைபோற்றும் பாவாண—தொண்டனேன்
எண்ணுவதே யென்வடிவை யீவாய் பரமேட்டி
தண்ணருடந் தாளாய் தடுத்து. (௨௯)

வடமொழிவே தக்கருத்தை வாகாய்த் தமிழில்
திடமாய்க் குறட்பாவாற் செப்பித்—திடமில்லா
என்போன் றவர்க்கு மெளிதி லுணர்வளிக்குஞ்
செந்நாப்போ தாரைசெஞ்சே சேர். (௩0)

மறைப்புநினைப் பற்றொளிரு மாண்பொருளை யாணாய்க்
கறைப்படல நீக்கியெற்குக் காட்டி—மறைப்பின்றி
எங்குந்தா னென்வடிவா வேமார்ந் திருக்கவருள்
எங்குநிறை வள்ளுவரே யிங்கு. (௩௧)

அற்றா ரழிபசியை யார்வமுட னீக்காநீ
கற்றலொடு கேட்டலெனுங் காய்மனமே—யற்றவர்கட்
கில்லையென்னா திட்டே யெதிர்ந்தோர்க் கினியசொலி
நல்லதிரு வள்ளுவரை நாடு. (௩௨)

கல்வியொடு செல்வங் கனமலைபோ லுற்றாலும்
பல்லையிளித் தாவிவிடிற் பற்றுவதார்—கல்லகமே
எல்லை வரையகன்ற வெம்பெருமான் வள்ளுவர்தாள்
இல்லையெனா துன்னிநீ யீ. (௩௩)

தாயகமாம் வள்ளுவர்தாட் டாழ்வகலப் போற்றுதற்கு
நாயகமே யென்னோடு நாடிவந்தால்—சேயதிலா
நம்வடிவைக் காட்டுவித்து நாறுடலை நன்ககற்றிச்
செம்மையுறச் செய்திடுவார் தேர். (௩௪)

வய்யத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துட் டெய்வமென்ற தெய்வமே—வய்யத்துள்
வாழ வகையறியா வாய்மையிலா வன்னெஞ்சந்
தாழ வருளெனக்குத் தா. (௩௫)

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்தென்று—தேற்றியவா
ஏற்றவர்கட் கீயா விழிமனத்தே னென்னுளத்தை
மாற்றி யருள்வாய் மகிழ்ந்து. (௩௬)

கூடியே யற்பரொடு கோதுற் றலையாது
நாடியுன் சேவடியை நானுறவே—பாடினேன்
வேதாவே நாவலவ வேதத் துறுபொருளே
நாதா வெனையா ளயந்து. (௩௭)

உண்டுடுத்தி மாதருட னேயாம லின்புற்றுக்
கண்டார் நகைக்கவோ காயமுறல்—சண்டையிட்டுச்
சுற்றித் திரிவதனாற் றோன்றுமோ வள்ளுவர்தாள்
கற்றழியு நெஞ்சே கழறு. (௩௮)

நாதாந்த நற்பாலே நல்லோர்க்குத் தீந்தேனே
வேதாந்தச் துச்சி விளைசுகமே—நாதாவோ
போத வொளிவெளியே பொய்யா மொழிப்புலவா
ஆதரவு நீயென்னை யாள். (௩௯)

பண்டைமறை சொற்றபடி பத்திநெறி நில்லாது
தண்டப் படிப்புற்றுச் சாந்தமற்றேன்—தொண்டுசெய்து
தோத்தரித்தேன் வள்ளுவநின் றாவடியை யென்சிரத்தில்
ஏற்றி யருள்வா யினிது. (௪0)

ஊற்றுப் பெருக்கதுபோ லோயா தெழுமனதில்
தோற்று விடயஞ் சுகமென்ன—ஏற்றவர்க்கோ
ரெள்ளளவு மீயா திகழ்கின்ற தீயனை
வள்ளுவரே காத்தருள்வீர் வந்து. (௪௧)

தேவரெல்லாம் போற்றுந் திருவள் ளுவமணியே
பாவனையைப் போக்கியெனைப் பாலிப்பாய்—தாவி
அசையா தறிவா வமைதிபெற் றூறி
யிசையோ டிருக்கவரு ளெற்கு. (௪௨)

துக்கசுக மில்லாத துய்யசிவ மொன்றெனவே
நக்கனிட நன்கறிந்த நாவலவ—துக்கசுகந்
தோன்று மிடந்தனையுந் தோன்றா விடந்தனையும்
ஊன்றி யறிந்துணர வோது. (௪௩)

ஈசனன்று நால்வர்க் கெடுத்துரைத்த மாமொழியை
மாசகலப் பெற்று மயங்குகின்றேன்—ஈசனுரு
வள்ளுவரே யிம்மயக்கம் வாராத வாய்மையுறத்
தெள்ளறிவை யெற்கருள்வாய் தேர்ந்து. (௪௪)

சந்ததமு நீங்காது சாந்தமொடு பொன்னடியைப்
பந்தமெலா நீங்கும்வகை பற்றிடவே—சிந்தையற்ற
நந்தா நிலையளித்து நாயகனே நாவலனே
எந்தையே காத்தா ளியைந்து. (சரு)

வேல்விழியார் மேல்விழுந்து வீடறியா நாயினேன்
மால்போக்கி நின்னடிக்கண் மன்னிடவே—மால்கொணெஞ்சு
சுட்டெரிக்க மோனச் சுடரளிக்க நாவலனே
யிட்டமுறு தேனே வியம்பு. (சசு)

ஆறுறு போராத வாநந்த வென்வடிவைத்
மாறுது கண்டு மகிழாது—வேறு
கிரக வழிப்பட்டுக் கேடுற்றேன் றேவா
சிரமமிலா வாழ்விலெனைச் சேர். (சஎ)

பற்றற் றிருக்கை பரமசுக மென்றறிந்தும்
பற்றகற்றி யென்றன்னைப் பாராமல்—பற்றகன்ற
கற்று ரிகழக் கண்டவன்போற் பேசுகின்றேன்
நற்றேவா வந்தருள்செய் நன்கு. (சஅ)

நாற்றவுட லென்றியா னன்கறிந்து நாவலனே
ஆற்றலுட னவ்வுடலை யாதரித்தேன்—சோற்றுடலை
மண்ணு மதிக்கவே மாறுத சிந்தனைபைக்
கண்ணு வெனக்கருளிக் கா. (சகூ)

அறிவோடு நிட்டை யழகுபெறக் காட்டிக்
குறியையுணர் வித்தருளுங் கோவே—தறியுடலை
நானென்று பன்னளாய் நம்பினே னுவலனே
நானென்று மாறென் னவில். (ருo)

## வாழி.

பூதிமணி பூண்பவர்கள் பூமியிந் நூனன்னூ
லோதிப் பொருளுணர்ந்த வுத்தமர்க—ளாதியந்த
மில்லாத வள்ளுவர்தா ளேத்தித் துதிப்பவர்கள்
சொல்லார்ந்து வாழ்க சுகித்து.

திருவள்ளுவர் தோத்திர விளக்கம்
முற்றிற்று.
பழைய முட்பட்ச் செய்யுள் ருகூ.



தே. அ. சாமிகுப்புசாமி யவர்களியற்றிய

# புத்தகங்கள்.

| | | விலை அணா |
|---|---|---|
| 1. | குருஸ்தவம் | 1 |
| 2. | போத விளக்கம் | 2 |
| 3. | சொரூபாநந்த விளக்கம் | 1 |
| 4. | அனுபவாநந்த விளக்கம் | 1 |
| 5. | சாமி விளக்கம் | 1 |
| 6. | திருவள்ளுவர் தோத்திர விளக்கம் | 1 |
| 7. | கற்பு விளக்கம் | 3 |
| 8. | அன்னதான விளக்கம் | 2 |
| 9. | கருணை விளக்கம் | 2 |
| 10. | நன்மதி தீபம் | 4 |
| 11. | விபூதி விளக்கம் | 4 |
| 12. | ஞானசார விளக்கம் | 1 |
| 13. | துறவுநிலை விளக்கம் | 4 |

ஷை விளக்கங்களும் தீபமும் அரியபெரிய தத்துவ ஆராய்ச்சிகளையும், நீதிகளையும், பல வித்துவான்களின் அபிப்பிராயங்களையும் பெற்று, வெகுஜன சமுகத்தில் புலவர் பலரால் அரங்கேற்றஞ் செய்யப்பட்டனவாம்.

இந்நூற்களின் விக்கிரயப் பொருள், இந்நூற்களின் ஆசிரியர் நடாத்தும் ஸ்ரீ சச்சிதாநந்தசுவாமிகளின் குருபூஜை கைங்கரியத்திற்கே உபயோகிக்கப்படுவதால், இவற்றை யாவரும் வாங்கிப் பெரும் புண்ணியத்திற் காளாவார்களெனத் திருவருளைச் சிந்திக்கின்றனன்.

## புத்தகங் கிடைக்குமிடங்கள்.

ரிப்பன் பிரஸ், சென்னை.

கோ. வடிவேலு செட்டியார்,
கோமளேசுரன் பேட்டை,
சென்னை.

வே. சோக்கலிங்கம் பிள்ளை,
சுருட்டு ஷாப், பொறையாறு,
தரங்கம்பாடி போஸ்டு.

தே. அ. சாமிகுப்புசாமியவர்கள்
36, ஸ்ரீ சச்சிதாநந்த சங்கத்தலைவர்
வெங்கடேச பத்தன் வீதி,
பெருமாள்பேட்டை,
வேப்பேரி போஸ்டு, சென்னை.

இங்ஙனம்,
காளத்தி - இ - சிதம்பரசாமி புராணிகர்,
7, மணிக்கார செளல்டிரி ரோட்,
இராயபுரம் போஸ்டு, சென்னை.